श्रीः

# चतुर्विंशतिमूर्तिलक्षणम्

(द्वितीयो भागः)

# சதுர்விம்சதிமூர்த்தி லக்ஷணம்

## பாகம் 2

தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்




சரசுவதி மகால் நூலகம்

மற்றும் ஆய்வு மையம்

தஞ்சாவூர்

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண். 533

श्रीः

# चतुर्विंशतिमूर्तिलक्षणम्

(द्वितीयौ भागः)

# சதுர்விம்சதிமூர்த்தி லக்ஷணம்

(இரண்டாம் பகுதி)

பதிப்பாசிரியர்:

முனைவர் ஆ. வீரராகவன் M.A.,B.L.I.S. Ph.D.,

சம்ஸ்க்ருத பண்டிதர்

சரசுவதி மகால் நூலகம்




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்**
**மற்றும் ஆய்வு மையம்**

தஞ்சாவூர்

2016 ] [ விலை ரூ. 120-00

## நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | சதுர்விம்சதிமூர்த்தி லக்ஷணம் |
| பதிப்பாசிரியர் | : | முனைவர் ஆ. வீரராகவன் |
| வெளியிடுபவர் | : | இயக்குநர்,<br>சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர் |
| வெளியீட்டு எண் | : | 533 |
| மொழி | : | சம்ஸ்க்ருதம், தமிழ் |
| பதிப்பு | : | இரண்டாம் பதிப்பு |
| வெளியிட்டு நாள் | : | 2016 |
| தாள் | : | TNPL. 18.6 கி.கி. |
| நூல் அளவு | : | 21 x 14 செ.மீ. |
| பக்கங்கள் | : | 112 |
| படிகள் | : | 500 |
| எழுத்து | : | 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : | சரசுவதி மகால் நூலகம் |
| புத்தகக்கட்டு | : | மெலிந்த அட்டை |
| பொருள் | : | ஆகமம் |
| விலை | : | ரூ. 120-00 |

# வெளியீட்டாளர் முகவுரை

தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின் சரசுவதி மகால் நூலகம் தமிழ், சம்ஸ்க்ருதம், தெலுங்கு மற்றும் மராட்டி மொழிகளில் நாற்பதாயிரத்திற்கும் மேற்பட்ட சுவடிகளைப் பாதுகாத்து வருகின்றது. மேலும் இவற்றில் வெளிவராத அரிய சுவடிகளை மொழிப்பண்டிதர்கள், துறை வல்லுநர்கள் மற்றும் சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர்களை நியமித்து அவர்களைக்கொண்டு நூல்களாக சிறப்பான முறையில் பதிப்பித்து வெளியிட்டு வருகின்றது. அவ்வரிசையில் சதுர்விம்சதிமூர்த்தி லக்ஷணம் - இரண்டாம் பகுதி என்னும் இந்நூல் தற்போது இரண்டாம் பதிப்பாக வெளியிடப்படுகின்றது.

வைணவாகமங்களுள் ஸ்ரீ பாஞ்சராத்திர ஆகமத்தைச் சார்ந்த சதுர்விம்சதி மூர்த்தி லக்ஷணம் இந்நூலக வடமொழித்துறையில் பதிவாகியுள்ளது. சதுர்விம்சதி மூர்த்தி லக்ஷணத்தின் முதற் பகுதி ஏற்கனவே வெளியிடப்பட்டுள்ளது. இவ்விரண்டாம் பகுதி சதுர்விம்சதி மூர்த்தியின் தோத்திரங்கள், சதுர்விம்சதி மூர்த்திகளைக் கொண்ட தூண்கள், திருவரங்க கோபுரம், சந்திர புஷ்கரிணிக்கரை ஆகியவற்றில் காணப்படும் சதுர்விம்சதி மூர்த்திகள் போன்ற பல செய்திகளைத் தாங்கியதாய் தற்போது வெளியிடப்படுகின்றது.

சதுர்விம்சதி மூர்த்தி லக்ஷணம் என்ற இந்த இரண்டாம் பகுதியில் நூலின் பெயருக்கேற்ப கும்பங்களில் 24 மூர்த்திகளின் ஆவாஹனம் உள்ளடங்கிய பஞ்சவிம்சதி கலச ஸ்தாபன பூஜை முறை, திருவரங்கம், நான்முகன் கோபுரம் மற்றும் சந்திர புஷ்கரணிக்கரை சதுர்விம்சதி மூர்த்திகளின் (நிழற்படங்களுடன் கூடிய) விளக்கம் ஆகியவை காணக்கிடைக்கின்றன.

இந்நூலின் பதிப்புப் பணியைச் சிறப்பாகச் செய்துள்ள தஞ்சை சரசுவதி மகால் நூலக சம்ஸ்க்ருதப் பண்டிதர் முனைவர் ஆ. வீரராகவன் அவர்களுக்கு என் பாராட்டுகள்.

இந்நூல் வெளிவரத் தேவையான நிதியுதவி நல்கிய அரசுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூல் நன்கு வெளிவர ஆவன செய்துள்ள சரசுவதி மகால் நூலக நிருவாக அலுவலர் திருமதி அ. பூங்கோதை,M.A., அவர்களுக்கும், நூலகர் முனைவர் எஸ். சுதர்ஷன். M.A.,B.Lit.,M.L.I.S.Ph.D., அவர்களுக்கும் மற்றும் நூலகப் பணியாளர்களுக்கும் எனது பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூல் இலக்கிய ஆர்வலர்களுக்கும், ஆன்மீக வல்லுநர்களுக்கும், சிற்பக் கலைஞர்களுக்கும், மாணவர்களுக்கும் பெரிதும் பயனளிக்கும்.

தஞ்சாவூர்
22.02.2016

டாக்டர் என்.சுப்பையன்,இ.ஆ.ப.,
மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.



# முன்னுரை

சதுர்விம்சதி மூர்த்தி லக்ஷணம் என்ற இருபத்துநான்கு மூர்த்திகளின் இலக்கணம் வைணவாகமங்களான* பாஞ்சராத்திரம், வைகானஸம் போன்றவற்றில் இடம் பெறுகின்றது. சதுர்விம்சதிமூர்த்திகளைக் குறித்த தோத்திரங்களும் சில காணக்கிடைக்கின்றன. இந்நூலின் முதற்பகுதியில் சதுர்விம்சதி மூர்த்திகளின் ஓவியங்கள் அளிக்கப்பெற்றுள்ளன. ஆயினும் ஓவியங்கள் தரும் நாயகிகளின் விளக்கம் முதற்பகுதியை வெளியிடும்போது சரியாக அறியமுடியவில்லை. பிரதிமா ஸம்ப்ரோக்ஷணத்தின் சமயம் செய்யப்படுகின்ற பஞ்சவிம்சதி கலச பூஜையில் நடுத்திசை உள்பட ஐந்து திசைகளில் 5 x 5 = 25 கலசங்களை நிறுவி கேசவாதி சதுர்விம்சதி மூர்த்திகளையும், நடுவில் நாராயணனையும் நிறம், ஆடை, தேவியருடன் ஆவாகனம் செய்யும் முறை கூறப்பட்டுள்ளது.

அந்த சுவடி நூல் தரும் செய்திகளில் மூர்த்தி லக்ஷணம் மட்டும் பாஞ்சராத்திர கருட சம்ஹிதை அடிப்படையிலும், மற்றவை தந்திரசார பாஞ்சராத்திர ஆகமத்தைச் சார்ந்தும் அமையப்பெற்றுள்ளது.

சதுர்விம்சதி மூர்த்தி லக்ஷணம் முதற்பகுதியில் கொடுக்கப்பட்டுள்ள ஓவியங்களின் முழுமையான விளக்கம்

---

* वैखानसं पाञ्चरात्रं प्रतिष्ठासारमेव च ।
विज्ञानललितं चेति चत्वारो वैष्णवागमाः ॥

श्रीतत्वनिधिः - S. 2540, P. No. 353, T.M.S.S.M. L. Thanjavur.

இந்த இரண்டாம் பகுதி பதிப்பினால் நிறைவு பெற்றதாகின்றது. அன்வாதானவிதியில் கேசவாதி பன்னிருவர் வளர்பிறைக்கான மூர்த்திகளாகவும், ஸங்கர்ஷணாதி துவாதசமூர்த்திகள் தேய்பிறைக்கான மூர்த்திகளாகவும் கூறப்படுகின்றனர்.[1] வாசுதேவ பத்மநாப நாராயண ஜனார்தனர்களுக்கு நிறங்களிலும் ஆயுதங்களிலும் பேதமுண்டு. சதுர்விம்சதி மூர்த்திகள் அனைவரும் பீதாம்பரதாரிகள். திண்டோளுடன் ஸ்ரீவத்ஸம், கௌஸ்துபம், வனமாலை ஆகிய அணிகலன்கள் இவர்களுக்கு உண்டு. போகத்திற்குரிய (நாம் வணங்கி மகிழ்வதற்குரிய) மூர்த்தியாய் இவர்களை நிறுவுவோமானால் தேவியருடன் அமைக்கலாம். மோக்ஷத்தை விரும்புபவன் தேவியரின்றி பிரதிஷ்டை செய்விக்க வேண்டும். நின்ற இருந்த கிடந்த கோலங்களிலும் ஊர்தியிலும் சதுர்விம்சதி மூர்த்திகளை நிறுவலாம் என்ற செய்தியினை ஸ்ரீபாஞ்சராத்திர 'ஆகமத்தைச் சேர்ந்த பாத்மசம்ஹிதை தெரிவிக்கின்றது.[2] இருந்த கோலத்தில் சதுர்விம்சதி மூர்த்திகளுள் ஒன்றான விஷ்ணுமூர்த்தியை இந்நூலின் 55ம் பக்கத்தில் காணலாம். அந்த விஷ்ணுமூர்த்தி நவகிரஹங்களுள் ஒன்றான புதனுக்கு அதிதேவதை என்பது குறிப்பிடத்தக்கது.[3] இவ்வாறு சதுர்விம்சதி மூர்த்திகளின் வழிபாடு கலசத்திலும், வையூஹிக வேள்வியிலும், நவகிரஹ வழிபாட்டிலும் இடம்பெறுவதாக அறியமுடிகின்றது.

இந்த "சதுர்விம்சதி மூர்த்திகளை நிறுவுபவர்கள் ஆயுள் விருத்தியையும் நோயற்ற வாழ்வையும், இப்பிறவியில் பெறற்கரிய பேறுகளையும், மறுமைப்பயனான மோக்ஷத்தையும் அடையப்பெறுவர்" என பாத்மசம்ஹிதை தெரிவிக்கின்றது.[4]

---

1. Mss. No. 7305 (a) / D. 27830, T.M.S.S.M. Library, Thanjavur.
2. चतुर्विंशतिमूर्तिलक्षणम् First Part P. No. 1-3.
3. Text (IInd Part P. No. 55 & 56
4. चतुर्विंशतिमूर्तिलक्षणम् First Part P. No. 1-3.

மேலும், திருவரங்கத்திலுள்ள சதுர்விம்சதி மூர்த்திகள் கருடசம்ஹிதையின் அடிப்படையில் அமைக்கப் பெற்றுள்ளன. பாத்ம சம்ஹிதை கூறும் சதுர்விம்சதி மூர்த்தி லக்ஷணத்தில் வாமனன், ஸ்ரீதரன், இருடீகேசன், பத்மநாபன், தாமோதரன், அநிருத்தன், அதோக்ஷஜன், ந்ருஸிம்மன் ஆகியோர் சிறிது மாறுபட்டு விளங்குகின்றனர். ஹரி மூர்த்திக்கு கமலாசனம் கூறப்பட்டுள்ளது. விஷ்வக்ஸேன் சம்ஹிதையில் கூறப்பட்டுள்ள நாராயண மூர்த்தி லக்ஷணம் கருட பாத்ம சம்ஹிதையைக் காட்டில் வேறுபட்டு விளங்குகிறது.[1]

கருட சம்ஹிதையில் உள்ள அநிருத்த மூர்த்தி லக்ஷணம் மேல் இரு கைகளின் ஆயுதங்கள் ஹயசீர்ஷ சம்ஹிதையின் அடிப்படையிலும், கீழ் இரு கைகளின் ஆயுதங்கள் பாத்ம சம்ஹிதை கூறும் லக்ஷணத்திற்கு ஒப்பாகவும் அமையப் பெற்றுள்ளன.[2] இனி இந்நூல் கூறும் செய்திகளைச் சிறிது பார்ப்போம்.

**நூற் சார்ந்த செய்திகள்**

சதுர்விம்சதி மூர்த்தி லக்ஷணம் என்ற இந்த இரண்டாம் பகுதியில் நூலின் பெயருக்கேற்ப 24 மூர்த்திகளின் ஆவாகனம் உள்ளடங்கிய பஞ்சவிம்சதி கலச ஸ்தாபன பூசை முறை, சதுர்விம்சதி தோத்திரங்கள், துவாதசாக்ஷரக மந்திரம், தோத்திரம், சதுர்விம்சதி மூர்த்திகள் கொண்ட தூண்களின் குறிப்பிடப்பட்டுள்ள சதுர்விம்சதி மூர்த்திகள், திருவரங்கம், நான்முகன் கோபுரம் மற்றும் சந்திர புஷ்கரணிக்கரை சதுர்விம்சதி மூர்த்திகளின் (நிழற்படங்களுடன் கூடிய) விளக்கம்[3] ஆகியன காணக்கிடைக்கின்றன.

---

1. चतुर्विंशतिमूर्तिलक्षणम् First Part P. No. 7.

2. चतुर्विंशतिमूर्तिलक्षणम् First Part P. No. 21.

3. Text (IInd Part P. No. 62 - 85)

## பதிப்பிற்குதவிய சுவடி

சதுர்விம்சதி மூர்த்தி லக்ஷணம் எனும் இந்த இரண்டாம் பகுதி, பதிப்பிற்கு அடிப்படையான காகிதச்சுவடி பிரதிமா ஸம்ப்ரோக்ஷண விதி என்ற நூலிலிருந்து எடுத்துக்கொள்ளப் பட்டுள்ளது. அஃது தேவநாகரி எழுத்தில் எழுதப்பெற்றதாய் தஞ்சை சரசுவதி மகால் சம்ஸ்க்ருதத் துறையில் MSS. No. 7305 (B) / D. No. 28108 என்ற எண்ணில் பதிவாகியுள்ளது.

## பதிப்பு முறை

சதுர்விம்சதி மூர்த்தி லக்ஷணம் என்னும் இந்த இரண்டாம் பகுதி மொத்தம் 17 வகை தலைப்புகளை அடிப்படையாகக் கொண்டது. அந்த 17 வகைத் தலைப்பிலான செய்திகள் யாவும் வடமொழி மூலத்துடன் தமிழ் எழுத்துப் பெயர்ப்புச் செய்து தமிழில் பொழிப்புரையும் முன்னுரை, பொருளடக்கங் களும் அமைய பதிப்புப்பணி மேற்கொள்ளப் பட்டிருக்கிறது.

## பயன்கள்

சதுர்விம்சதி மூர்த்தி லக்ஷணம் என்ற நூலின் இரண்டாம் பகுதி ஆன்மீகம், ஆகமம், சிற்பம் போன்ற துறை சார்ந்த வல்லுநர்களுக்கும், சதுர்விம்சதி மூர்த்திகளைப் பற்றி ஆராய்ச்சி செய்வோருக்கும், பெரிதும் பயன் தரும்.

## நன்றியுரை

சதுர்விம்சதி மூர்த்தி லக்ஷணம் என்ற நூலின் இரண்டாம் பகுதியினைப் பதிப்பிக்க ஆணை வழங்கிய மாவட்ட ஆட்சித் தலைவர் மற்றும் சரசுவதி மகால் நூலக இயக்குனருமான உயர்திரு ம.சு. சண்முகம் இ. ஆ. ப. அவர்களுக்கும்,

இந்நூலக முன்னாள் நிருவாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர் (பொறுப்பு) திரு. சாமி சிவஞானம் அவர்களுக்கும், தற்போதைய மாவட்ட ஆட்சித் தலைவரின் நேர்முக உதவியாளர் (பொது) மற்றும் இந்நூலக நிருவாக அலுவலர் பொறுப்பு வகிக்கும் திரு. பெ. சந்திரசேகரன் அவர்களுக்கும் எனது நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூல் ஒளி அச்சுக்கோப்பு வழியில் செம்மையாகவும், அழகாகவும் அச்சிடப்பட்டுள்ளது.

இப்பணியினைச் சிறப்பாகச் செய்தளித்த நூலக கணினி பிரிவினருக்கும் மற்றும் இதற்குத் துணைநின்ற ஏனையோருக்கும் எனது உளங்கனிந்த நன்றிகளைத் தெரிவித்து மகிழ்கிறேன்.

*தஞ்சாவூர்*
*1-8-2010*

முனைவர் **ஆ. வீரராகவன்,**
சம்ஸ்க்ருதப்பண்டிதர்,
சரசுவதி மகால் நூலகம்,
தஞ்சாவூர்.



# வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள் அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும் பனை ஓலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப் புகழை, பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம்பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே, நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம் என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

***மாவட்ட ஆட்சித்தலைவர்***
***மற்றும் இயக்குநர்***
***சரசுவதி மகால் நூலகம்***
***மற்றும் ஆய்வு மையம்***
***தஞ்சாவூர்.***

## பொருளடக்கம்

श्रीः

# चतुर्विंशतिमूर्तिलक्षणम्

(द्वितीयो भागः)

ஸ்ரீ:

# சதுர்விம்சதிமூர்த்தி லக்ஷணம்

(இரண்டாம் பகுதி)

சதுர்விம்சதிமூர்த்தி லக்ஷணத்தின் இரண்டாம் பகுதியாகிற இந்நூலில் ஸ்ரீபாஞ்சராத்ர ஆகமத்தைச் சார்ந்த ஸ்ரீகபிஞ்ஜல சம்ஹிதை கூறும் பஞ்சவிம்சதி (25) கலச தேவதைகளின் பூசை முறை விவரிக்கப்பட்டுள்ளது. கபிஞ்சல சம்ஹிதை சரசுவதி மகால் நூலகத்தில் காகித கையெழுத்துப் பிரதியாய்க் காணக்கிடைக்கிறது. அந்த காகிதப் பிரதியில் நாராயணனை மையமாகக்கொண்டு கேசவன் முதலான இருபத்துநான்கு மூர்த்திகளை 'சதுர்விம்சதி மூர்த்தி லக்ஷணம்' கூறிய முறைப்படி தியானம், ஆவாஹனம் போன்றவற்றைச் செய்து வணங்கக் கூறப்பட்டுள்ளது.

**கலசஸ்தாபன (வைக்கும்) முறை**

இருபத்தைந்து கலசங்களை முதலில் எடுத்துக்கொண்டு அவற்றுள் ஐந்தினை நடுப்பகுதியிலும், எஞ்சிய கலசங்களை முறைே!' கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு ஆகிய நாற்றிசைப் பகுதிகளில் ஐந்தைந்தாக (5x5=25) வைக்கவேண்டும். ஐந்து பகுதிகளில் வைக்கும் 5 கலசங்களை (1) நடு, (2) கிழக்கு, (3) தெற்கு, (4) மேற்கு, (5) வடக்கு என்ற திசைகளின் வழி அமைக்க வேண்டும்.

# पञ्चविंशतिकलशेषु देवतावाहनक्रमः

## இருபத்தைந்து கலசங்களில் தேவதாவாஹனமுறை



**கலச தேவதாமூர்த்திகள்**

இருபத்தைந்து கலசங்களை முறைப்படி அமைத்த பின்பு-

1. நாராயணன், கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன்
6. விஷ்ணு, மதுசூதனன், திரிவிக்கிரமன், வாமனன், சிரீதரன்,
11. இருடீகேசன், பற்பநாபன், தாமோதரன், ஸங்கர்ஷணன், வாசுதேவன்

16. பிரத்யும்னன், அநிருத்தன், புருஷோத்தமன், அதோக்ஷஜன், நரசிம்மன்,

21. அச்யுதன், ஜனார்தனன், உபேந்திரன், ஹறி, கிருஷ்ணன்,

ஆகியோர் அக்கலசங்களில் ஆவாஹிக்கப்பெறும் (குடிகொள்ளுமாறு நினைக்கப்பெறும்) ஐயைந்து கலச தேவதாமூர்த்திகள் ஆவர்.

**ஆவாஹன முறை**

தந்திரஸாரத்தில் பாஞ்சராத்திர ஆகமத்தைச் சார்ந்த கபிஞ்சல ஸம்ஹிதையைப் பின்பற்றி கலச ஸ்தாபனம் செய்து, பீடபூசையை முடித்தபின் ஸ்தாபிக்கப்பெற்ற இருபத்தைந்து கலசங்களில் தேவதைகளை ஆவாஹிக்கும் (அதிலே குடிகொள்ளுமாறு நினைத்துச் செய்யும்) முறை சொல்லப்பட்டிருக்கிறது.

ஐந்தைந்தாக நிறுவியுள்ள ஒவ்வொரு தொகுதியிலும் நடு, கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு என்ற வழியில் குறிப்பிட்டுள்ள சதுர்விம்சதி மூர்த்திகளை ஆயுதங்கள், நிறம், வஸ்திரம், அணிகலன் ஆகியவற்றோடு நாயகியாரையும் சேர்த்து ஆவாஹனம் செய்தல் வேண்டும்.

சதுர்விம்சதி மூர்த்தி லக்ஷணத்தின் குறிக்கோளினை அடியொற்றிச் செல்லும் நூலின் போக்கினைச் சற்று கவனிப்போம்.

श्रीः

## तन्त्रसारे श्रीपाञ्चरात्रकपिञ्जलसंहितोक्तमार्गेण पीठपूजानन्तरं - - पञ्चविंशतिकलशेषु देवतावाहनम्*।

தந்த்ரஸாரே ஸ்ரீபாஞ்சராத்ரகபிஞ்ஜல ஸம்ஹிதோக்த மார்கேண பீடபூஜாநந்தரம் -

--பஞ்சவிம்சதிகலசேஷு தேவதாவாஹனம்

**1. मध्यमपञ्चके - मध्ये-**

पद्मयुतदक्षिणोच्चकराय, गदायुतवामोच्चकराय, चक्रयुत वामाधःकराय, शङ्खयुतदक्षिणाधःकराय, मेघश्यामवर्णाय, पीताम्बरधराय, मणिमयाभरणयुताय, लक्ष्मीसमेताय, नारायणाय नमः नारायणं आवाहयामि ।

***1. மத்யமபஞ்சகே - மத்யே -***

*பத்மயுத தக்ஷிணோச்சகராய, கதாயுதவாமோச்சகராய, சக்ரயுத வாமாத: கராய சங்கயுத தக்ஷிணாத:கராய, மேகச்யாமவர்ணாய, பீதாம்பரதராய, மணிமயாபரணயுதாய, லக்ஷ்மீ ஸமேதாய, நாராயணாய நம:, நாராயணம் ஆவாஹயாமி.*

***பொருள்: 1. நாராயணன்***

*நடுப்பகுதியில் அமைக்கப்பெற்ற ஐந்து கலசங்களில் நடுக்கலசத்தில் தாமரை கதைகளைத் தன் வலது இடது மேற்கரங்களில் பெற்றும், ஆழி சங்கங்களைத் தன் இடது வலது கீழ்க்கரங்களில் பெற்றும், மேகம் போன்று கறுமை வண்ணங்கொண்டு மஞ்சள் பட்டாடை தரித்தும் மணிகளாலான அணிகலன் அணிந்தும், லக்ஷ்மியுடன் இலங்குகின்றவரான நாராயணனை வணங்கி ஆவாஹனம் செய்கின்றேன்.*

---

* MSS. 7305, Sarasvati Mahal Library, Thanjavur.

**2. (तत्) पूर्वे–**

शङ्खयुतदक्षिणोच्चकराय, चक्रयुतवामोच्चकराय, गदायुत वामाधःकराय, पद्मयुतदक्षिणाधःकराय, स्वर्णवर्णाय, शुक्लाम्बरधराय, मुक्ताभरण-भूषिताय, श्रीसहिताय केशवाय नमः केशवं आवाहयामि ।

***2. (தத்) பூர்வே -***

*சங்க்கயுத தக்ஷிணோச்சகராய, சக்ரயுதவாமோச்சகராய, கதாயுதவாமாத:கராய, பத்மயுததக்ஷிணாத:கராய, ஸ்வர்ணவர்ணாய, சுக்லாம்பரதராய, முக்தாபரண-பூஷிதாய, ஸ்ரீ ஸஹிதாய கேசவாய நம:, கேசவம் ஆவாஹயாமி.*

***(பொ.)2. கேசவன்***

*நாராயணன் ஆவாஹனம் செய்த நடுப்பகுதி நடுக்கலசத்திற்கு கீழ்த்திசைக்கலசத்தில் சங்கு சக்கரங்களைத் தன் வலது இடது மேற்கரங்களில் பெற்றும், தண்டு தாமரைகளைத் தன் இடது வலது கீழ்கரங்களில் பெற்றும் பொன் நிறங்கொண்டும், வெண்பட்டாடை உடுத்தியும், முத்தாலான அணிகலன்களை அணிந்தும் ஸ்ரீயுடன் இலங்குகின்றவரான கேசவனை வணங்கி ஆவாஹனம் செய்கின்றேன்.*

**3. दक्षिणे–**

पद्मयुतदक्षिणोच्चकराय, गदायुतवामोच्चकराय, चक्रयुतवामाधःकराय, शङ्खयुतदक्षिणाधःकराय, मेघश्यामवर्णाय, पीताम्बरधराय, मणिमयाभरणयुताय, लक्ष्मीसमेताय नारायणाय नमः नारायणमावाहयामि ।

***3. தக்ஷிணே -***

*பத்மயுத தக்ஷிணோச்சகராய, கதாயுதவாமோச்சகராய, சக்ரயுதவாமாத: கராய, சங்க்கயுத தக்ஷிணாத:கராய, மேகச்யாமவர்ணாய, பீதாம்பரதராய, மணிமயாபரண-யுதாய, லக்ஷ்மீஸமேதாய நாராயணாய நம:, நாராயணம் ஆவாஹயாமி.*

(பொ.) 3. நாராயணன்

கேசவனை ஆவாஹனம் செய்த நடுப்பகுதி கீழ்திசைக் கலசத்திற்குத் தென்திசைக் கலசத்தில் *தாமரை கதைகளை தன் வலது இடது மேற்கரங்களில் பெற்றும், ஆழி சங்கங்களைத் தன் இடது வலது கீழ்க்கரங்களில் பெற்றும், மேகம் போன்று கறுமை வண்ணங்கொண்டு மஞ்சள் பட்டாடை தரித்தும் மணிகளாலான அணிகலன் அணிந்தும், லக்ஷ்மியுடன் இலங்குகின்றவரான நாராயணனை வணங்கி ஆவாஹனம் செய்கின்றேன்.

4. पश्चिमे-

चक्रयुतदक्षिणोच्चकराय, शङ्खयुत वामोच्चकतराय, पद्मयुतवामाधः-कराय, गदायुतदक्षिणाधःकराय, उत्पलवर्णाय, चित्रमाल्याम्बरधराय, पुण्डरीकनिभेक्षणाय, कमलासहिताय माधवाय नमः माधवमावाहयामि ।

4. பஸ்ச்சிமே-

சக்ராயுததக்ஷிணோச்சகராய, சங்க்கயுத வாமோச்சகராய, பத்மயுத வாமாத:கராய, கதாயுத தக்ஷிணாத:கராய, உத்பலவர்ணாய, சித்ரமால்யாம்பரதராய, புண்டரீக நிபேக்ஷணாய, கமலாஸஹிதாய மாதவாய நம: மாதவமாவாஹயாமி.

(பொ.) 4. மாதவன்

நடுப்பகுதியில் அமைக்கப்பெற்ற ஐந்து கலசங்களில் மேற்றிசைக் கலசத்தில் ஆழி சங்குகளை வலது இடது மேற்கரங்களில் பெற்றும், தாமரை கதைகளை தன் இடது வலது கீழ்க்கரங்களில் பெற்றும், அல்லி மலரின் வண்ணம் கொண்டு விசித்திரமாலை உடைய பட்டாடை தரித்தும், தாமரைப்போன்ற கண்களைக்கொண்டும், கமலையுடன் இலங்குகின்றவரான மாதவனை வணங்கி ஆவாஹனம் செய்கின்றேன்.

5. उत्तरे-

गदायुतदक्षिणोच्चकराय, पद्मयुतवामोच्चकराय, शङ्खयुतवामाधः-कराय, चक्रयुतदक्षाधःकराय, तप्तकाञ्चनभूषिताय*, रक्तारविन्द-नयनाय, पद्मासहिताय गोविन्दाय नमः, गोविन्दमावाहयामि ।

5. உத்தரே-

கதாயுத தக்ஷிணோச்சகராய, பத்மயுத வாமோச்சகராய, சங்க்கயுத வாமாத:கராய, சக்ரயுததக்ஷாத:கராய, தப்தகாஞ்சன பூஷிதாய, ரக்தாரவிந்த நயனாய, பத்மாஸஹிதாய கோவிந்தாய நம:, கோவிந்த மாவாஹயாமி.

(பொ.) 5. கோவிந்தன்

நடுப்பகுதியில் அமைக்கப்பெற்ற ஐந்து கலசங்களில் வடதிசைக் கலசத்தில் தண்டு தாமரைகளைத்தன் வலது இடது மேற்கரங்களில் பெற்றும், சங்குசக்கரங்களைத் தன் இடது வலது கீழ்க்கரங்களில் பெற்றும், சுட்ட இரும்பினைப் போல் செந்நிறமாய் விளங்குபவரும், செந்தாமரைக் கண்களைப் பெற்றவரும், பத்மையுடன் இலங்குகின்றவரான கோவிந்தனை வணங்கி ஆவாஹனம் செய்கின்றேன்.

6. पूर्वपञ्चके – मध्ये –

पद्मयुतदक्षोच्चकराय, शङ्खयुतवामोच्चकराय, चक्रयुतवामाधःकराय, गदायुतदक्षिणाधःकराय, श्वेतवर्णाय, हेमाम्बरधराय, स्रग्विणे, केयूराङ्गदभूषिताय, पद्मिनीसहिताय विष्णवे नमः विष्णुमावाहयामि ।

பூர்வபஞ்சகே-மத்யே-

பத்மயுத தக்ஷோச்சகராய, சங்க்கயுத வாமோச்சகராய, சக்ரயுதவாமாத:கராய, கதாயுத தக்ஷிணாத: கராய, ச்வேத வர்ணாய, ஹேமாம்பரதராய, ஸ்ரக்விணே, கேயூராங்கத-பூஷிதாய, பத்மினீ ஸஹிதாய விஷ்ணவே நம: விஷ்ணும் ஆவாஹயாமி.

---

* शशिवर्णाय-केशवादिचतुर्विंशतिस्तोत्रम् – T.M.S.S.M. Library, Thanjavur. Book No. S. 3067.

(பொ.) 6. விஷ்ணு

கீழ்த்திசையில் அமைக்கப்பெற்ற ஐந்து கலசங்களில் நடுக்கலசத்தில் தாமரை சங்குகளைத் தன் வலது இடது மேற்கரங்களில் கொண்டும், சக்ரம் கதைகளைத் தன் இடது வலது கீழ்க்கரங்களில் பெற்றும், வெண்மை நிறத்தினையும் பெற்று, பொன்னிறப் பட்டாடை தரித்தும், மாலையைத் தரித்தும், கேயூரம் என்ற அணிகலனை அணிந்தும், பத்மினியுடன் இலங்குகின்றவரான விஷ்ணுவை வணங்கி ஆவாஹனம் செய்கிறேன்.

**7. तत्पूर्वे –**

शङ्खयुतदक्षोच्चकराय, पद्मयुतवामोच्चकराय, गदायुतवामाधःकराय, चक्रयुतदक्षाधःकराय, शोणवर्णाय, कमलाश्रयाय, पद्मालया (चित्रे कमलालया)युताय,* मधुसूदनाय नमः, मधुसूदनं आवाहयामि ।

**7. தத்பூர்வே –**

சங்கயுத தக்ஷோச்சகராய, பத்மயுத வாமோச்சகராய, கதாயுதவாமாத:கராய, சக்ரயுததக்ஷாத:கராய, சோணவர்ணாய, கமலாச்ரயாய, பத்மாலயா (சித்ரே கமலாலயா)யுதாய,* மதுசூதனாய நம:, மதுசூதனம் ஆவாஹயாமி.

(பொ.) 7. மதுசூதனன்

கீழ்த்திசையில் அமைக்கப்பெற்ற ஐந்து கலசங்களில் கீழ்த்திசைக் கலசத்தில் சங்கு தாமரைகளை வலது, இடது மேற்கரங்களில் பெற்றும், கதை சக்ரங்களைத் தன் இடது வலது கீழ்க்கரங்களில் கொண்டும், சிவந்த நிறத்தினைப் பெற்றும், கமலாலயாவுடன் இலங்குகின்றவருமான மதுசூதனனை வணங்கி ஆவாஹனம் செய்கின்றேன்.

**8. दक्षिणे –**

गदायुतदक्षोच्चकराय, चक्रयुतवामोच्चकराय, शङ्खयुतवामाधःकराय, पद्मयुतदक्षाधःकराय, रक्तवर्णाय, किरीटहारकेयूरकुण्डलविराजिताय, रमासहिताय, त्रिविक्रमाय नमः, त्रिविक्रमं आवाहयामि ।

* See First vol. P. No. 11

8. தக்ஷிணே –

கதாயுதக்ஷோச்சகராய, சக்ரயுதவாமோச்சகராய, சங்க்கயுத-வாமாத:கராய, பத்மயுததக்ஷாத:கராய, ரக்தவர்ணாய, கிரீடஹாரகேயூரகுண்டலவிராஜிதாய, ரமாஸஹிதாய த்ரிவிக்ரமாய நம: த்ரிவிக்ரமம் ஆவாஹயாமி.

(பொ.) 8. திரிவிக்ரமன்

கீழ்த்திசையில் அமைக்கப்பெற்ற ஐந்து கலசங்களில் தென்திசைக் கலசத்தில் கதை சக்கரங்களைத் தன் வலது இடது மேற்கரங்களில் பெற்றும், சங்கம் பத்மங்களைத் தன் இடது வலது கீழ்க்கரங்களில் பெற்றும், ரக்தவர்ணங்கொண்டு கிரீடஹார கேயூரகுண்டலங்களை அணிந்தும், ரமையுடன் இலங்குகின்றவருமான திரிவிக்கிரமனை வணங்கி ஆவாஹனம் செய்கின்றேன்.

9. पश्चिमे –

चक्रयुतदक्षोच्चकराय, गदायुतवामोच्चकराय, पद्मयुतवामाधःकराय, शङ्खयुतदक्षाधःकराय, कुन्दवर्णाय, पुण्डरीकायतेक्षणाय, वृषाकपासहिताय, वामनाय नमः, वामनमावाहयामि ।

9. பஸ்சிமே –

சக்ரயுததக்ஷோச்சகராய, கதாயுதவாமோச்சகராய, பத்மயுதவாமாத: கராய, சங்க்கயுத தக்ஷாத: கராய, குந்தவர்ணாய, புண்டரீகாயதேக்ஷணாய, வ்ருஷாகபா ஸஹிதாய, வாமனாய நம: வாமனம் ஆவாஹயாமி.

(பொ.) 9. வாமனன்

கீழ்த்திசையில் அமைக்கப்பெற்ற ஐந்து கலசங்களில் மேற்றிசைக் கலசத்தில் சக்ரம் கதைகளை மேலிரு கரங்களில் பெற்றும், தாமரை சங்கங்களை இடது வலது கீழ்க்கரங்களில் கொண்டும் மல்லிகை நிறத்தினையும், அரவிந்தம் போன்று நீண்ட கண்களைப் பெற்றும், விருஷாகபையுடன் வாமனனை வணங்கி வாமனனை ஆவாஹனம் செய்கின்றேன்.

**10. उत्तरे -**

चक्रयुतदक्षोच्चकराय, गदायुतवामोच्चकराय, शङ्खयुतवामाधःकराय, पद्मयुतदक्षाधःकराय, पुण्डरीकवर्णाय, रक्तारविन्दनयनाय, मुक्तादाम विभूषिताय, धन्यासहिताय श्रीधराय नमः श्रीधरमावाहयामि ।

***10. உத்தரே -***

*சக்ரயுததக்ஷோச்சகராய, கதாயுதவாமோச்சகராய, சங்க்கயுத வாமாத: கராய, பத்மயுத தக்ஷாத:கராய, புண்டரீகவர்ணாய, ரக்தாரவிந்தநயனாய, முக்தாதாமவிபூஷிதாய, தன்யா ஸஹிதாய ஸ்ரீதராய நம: ஸ்ரீதரமாவாஹயாமி.*

***(பொ.) 10. ஸ்ரீதரன்***

*கீழ்த்திசையில் அமைக்கப்பெற்ற ஐந்து கலசங்களில் வடதிசைக் கலசத்தில் சக்கரம் கதைகளை மேலிரு கரங்களில் பெற்றும், சங்கம் பத்மங்களை இடது வலது கீழிரு கரங்களில் கொண்டும், தாமரை வர்ணத்தினையும், செந்தாமரைக் கண்களையும், முத்துவடம் அணிந்து தன்யையுடன் இலங்குகின்றவரான ஸ்ரீதரனை வணங்கி ஆவாஹனம் செய்கின்றேன்.*

**11. दक्षिणपञ्चके – मध्ये –**

चक्रयुतदक्षोच्चकराय, पद्मयुतवामोच्चकराय, शङ्खयुतवामाधःकराय, गदायुतदक्षाधःकराय, विद्युद्वर्णाय, पुण्डरीकावतंसकाय, बुद्धिसहिताय, हृषीकेशाय नमः, हृषीकेशमावाहयामि ।

***11. தக்ஷிணபஞ்சகே - மத்யே -***

*சக்ரயுததக்ஷோச்சகராய, பத்மயுதவாமோச்சகராய, சங்க்கயுதவாமாத: கராய, கதாயுததக்ஷாத: கராய, வித்யுத்வர்ணாய, புண்டரீகாவதம்ஸகாய, புத்திஸஹிதாய, ஹ்ருஷீகேசாய நம:, ஹ்ருஷீகேசம் ஆவாஹயாமி.*

*(பொ.) 11. இருடீகேசன்*

*தென்திசையில் அமைக்கப்பெற்ற ஐந்து கலசங்களில் நடுக்கலசத்தில் சக்ரம் பத்மங்களை வலது இடது மேலிரு கரங்களில் பெற்றும், சங்கம் கதைகளைக் கீழிரு கரங்களில் கொண்டும், மின்னலைப் போன்ற நிறத்தினைப் பெற்றும், தாமரை மலருடன் புத்தியோடும் விளங்குகின்றவரான இருடீகேசனை வணங்கி ஆவாஹனம் செய்கின்றேன்.*

**12. पूर्वे –**

पद्मयुतदक्षोच्चकराय, चक्रयुतवामोच्चकराय, गदायुतवामाधःकराय, शङ्खयुतदक्षाधःकराय, इन्द्रनीलनिभाय, पीताम्बरधराय, चित्रमाल्यानुलेपनाय, यज्ञासहिताय श्रीपद्मनाभाय नमः पद्मनाभमावाहयामि ।

***12. பூர்வே –***

*பத்மயுததக்ஷோச்சகராய, சக்ரயுதவாமோச்சகராய, கதாயுதவாமாத:கராய, சங்க்கயுததக்ஷாத:கராய, இந்த்ரநீலநிபாய, பீதாம்பரதராய, சித்ரமால்யானு-லேபநாய, யக்ஞாஸஹிதாய ஸ்ரீபத்மநாபாய நம: பத்மநாபம் ஆவாஹயாமி.*

*(பொ.) 12. பத்மநாபன்*

*தென்திசையில் அமைக்கப்பெற்ற ஐந்து கலசங்களில் கீழ்த்திசைக் கலசத்தில் பத்மம், சக்ரங்களைத் தன் வலது இடது மேற்கரங்களில் பெற்றும், கதை சங்கங்களைத் தன் இடது வலது கீழ்கரங்களில் கொண்டும், இந்தரநீலம் போல் ஒளிர்பவரும், மஞ்சள் பட்டாடைத் தரித்தும், விசித்திர மாலைகள், விசேஷ கந்தங்கள் பூசப்பெற்றவரும், யக்ஞையுடன் பத்மநாபனை வணங்கி ஆவாஹனம் செய்கின்றேன்.*

**13. दक्षिणे –**

शङ्खयुतदक्षोच्चकराय, गदायुतवामोच्चकराय, चक्रयुतवामाधःकराय, पद्मयुतदक्षाधःकराय, शाद्धलवर्णाय, पीताम्बरधराय, विशालाक्षाय, नानारत्नविभूषिताय, इन्दिरासहिताय दामोदराय नमः दामोदरमावाहयामि ।

***13. தக்ஷிணே –***

*சங்க்கயுததக்ஷோச்சகராய, கதாயுதவாமோச்சகராய, சக்ரயுத வாமாத: கராய, பத்மயு தக்ஷாத: கராய, சாத்வலவர்ணாய, பீதாம்பரதராய, விசாலாக்ஷாய, நாநாரத்னவிபூஷிதாய, இந்திராஸஹிதாய தாமோதராய நம: தாமோதரம் ஆவாஹயாமி.*

***(பொ.) 13. தாமோதரன்***

*தென்திசையில் அமைக்கப்பெற்ற ஐந்து கலசங்களில் தென்திசைக் கலசத்தில் சங்கு, கதைகளைத் தன் மேலிரு கரங்களில் பெற்றும், சக்ரம் பத்மங்களைத் தன் கீழிரு கைகளில் கொண்டும் சேறு வண்ணத்துடன் மஞ்சள் பட்டாடை, அகன்றகண்கள், பல்வகை ரத்தின அணிகலன்கள் ஆகியவற்றைப் பெற்றும் இந்திரையுடன் தாமோதரனை வணங்கி ஆவாஹனம் செய்கின்றேன்.*

**14. पश्चिमे –**

शङ्खयुतदक्षोच्चकराय, पद्मयुतवामोच्चकराय, चक्रयुतवामाधःकराय, गदायुतदक्षाधःकराय, सितवर्णाय, हिरण्यासहिताय श्रीसङ्कर्षणाय नमः सङ्कर्षणं आवाहयामि ।

***14. பஸ்சிமே –***

*சங்க்கயுததக்ஷோச்சகராய, பத்மயுதவாமோச்சகராய, சக்ரயுத வாமாத: கராய, கதாயுத தக்ஷாத: கராய, ஸிதவர்ணாய, ஹிரண்யா ஸஹிதாய ஸ்ரீஸங்கர்ஷணாய நம: ஸங்கர்ஷணம் ஆவாஹயாமி.*

*(பொ.) 14. ஸங்கர்ஷணன்*

*தென்திசையில் அமைக்கப்பெற்ற ஐந்து கலசங்களில் மேற்றிசைக் கலசத்தில் சங்கபத்மங்களைத் தன் வலது இடது மேற்கரங்களில் பெற்றும் சக்ர கதைகளைத் தன் இடது வலது கீழ்க்கரங்களில் கொண்டும், வெண்மை வண்ணம் பெற்று, ஹிரண்யையுடன் இலங்குபவரான ஸங்கர்ஷணனை வணங்கி ஆவாஹனம் செய்கின்றேன்.*

**15. उत्तरे –**

शङ्खयुतदक्षोच्चराय, चक्रयुतवामोच्चरकराय, पद्मयुतवामाधःकराय, गदायुतदक्षाधःकराय, सितवर्णाय, हरिणीसहिताय, वासुदेवाय नमः, वासुदेवमावाहामि ।

*15. உத்தரே –*

*சங்க்கயுததக்ஷோச்சகராய, சக்ரயுதவாமோச்சகராய, பத்மயுத வாமத:கராய, கதாயுததக்ஷாத:கராய, ஸிதவர்ணாய, ஹரிணீஸஹிதாய, வாஸுதேவாய நம:, வாஸுதேவம் ஆவாஹயாமி.*

*(பொ.) 15. வாசுதேவன்*

*தென்திசையில் அமைக்கப்பெற்ற ஐந்து கலசங்களில் வடதிசைக் கலசத்தில் சங்கம், சக்கரங்களைத்தன், வலது, இடது மேற்கரங்களில் பெற்றும், பத்மம் கதைகளைத் தன் இடது, வலது கீழ்க்கரங்களில் பெற்றும் வெண்மை நிறங்கொண்டும், ஹரிணியுடன் இலங்குபவரான வாசுதேவனை வணங்கி ஆவாஹனம் செய்கிறேன்.*

**16. पश्चिमपञ्चके – मध्ये –**

शङ्खयुतदक्षोच्चराय, गदायुतवामोच्चकराय, पद्मयुतवामाधःकराय, चक्रयुत दक्षाधःकराय, कनकवर्णाय, सत्या सहिताय, प्रद्युम्नाय नमः, प्रद्युम्नमावाहयामि ।

**16. பஸ்சிமபஞ்சகே-மத்யே-**

சங்க்கயுத தக்ஷோச்சகராய, கதாயுதவாமோச்சகராய, பத்மயுதவாமாத:கராய, சக்ரயுததக்ஷாத:கராய, கனக வர்ணாய, ஸத்யாஸஹிதாய ப்ரத்யும்னாய நம: ப்ரத்யும்னம் ஆவாஹயாமி.

**(பொ.) 16. ப்ரத்யும்னன்**

மேற்றிசையில் அமைக்கப்பெற்ற ஐந்து கலசங்களில், நடுக்கலசத்தில் சங்ககதைகளைத் தன் வலது இடது மேற்கரங்களில் பெற்றும், பத்மம் சக்ரங்களைத் தன் இடது வலது கீழ்க்கரங்களில் தாங்கியும், பொன்னிறங்கொண்டும், ஸத்யையுடன் இலங்குபவரான ப்ரத்யும்னனை வணங்கி ஆவாஹனம் செய்கிறேன்.

**17. पूर्वे –**

गदायुतदक्षोच्चकराय, शङ्खयुतवामोच्चकराय, पद्मयुतवामाधःकराय चक्रयुतदक्षाधःकराय, नीलवर्णाय, नित्या सहिताय, अनिरुद्धाय नमः अनिरुद्धमावाहयामि ।

**17. பூர்வே –**

கதாயுத தக்ஷோச்சகராய, சங்க்கயுதவாமோச்சகராய, பத்மயுதவாமாத:கராய, சக்ரயுததக்ஷாத:கராய, நீலவர்ணாய, நித்யாஸஹிதாய அநிருத்தாய நம: அநிருத்தம் ஆவாஹயாமி.

**(பொ.) 17. அநிருத்தன்**

மேற்றிசையில் அமைக்கப்பெற்ற ஐந்து கலசங்களில் கீழ்த்திசைக் கலசத்தில் கதைசங்கங்களைத் தன் வலது இடது மேற்கரங்களில் பெற்றும், தாமரை, சக்கரங்களைத்தன் இடது வலது கீழ்க்கரங்களில் தாங்கியவரும், நீலவர்ணம் கொண்டு நித்யையுடன் இலங்குபவரான அநிருத்தரை வணங்கி ஆவாஹனம் செய்கின்றேன்.

**18. दक्षिणे –**

पद्मयुतदक्षोच्चकराय, शङ्खयुतवामोच्चकराय, गदायुतवामाधःकराय, चक्रयुतदक्षाधःकराय, धवलवर्णाय आनन्दिनी सहिताय श्रीपुरुषोत्तमाय नमः पुरुषोत्तमं आवाहयामि ।

*18. தக்ஷிணே –*

*பத்மயுததக்ஷோச்சகராய, சங்கயுதவாமோச்சகராய, கதாயுத வாமாத:கராய, சக்ரயுததக்ஷாத: கராய, தவளவர்ணாய, ஆனந்தினீஸஹிதாய புருஷோத்தமாய நம: புருஷோத்தமம் ஆவாஹயாமி.*

*(பொ.) 18. புருஷோத்தமன்*

மேற்றிசையில் அமைக்கப்பெற்ற ஐந்து கலசங்களில் தென்திசைக் கலசத்தில் பத்மம் சங்கங்களைத் தன் வலது இடது மேற்கரங்களில் பெற்றும், கதை சக்கரங்களைத் தன் இடது வலது கீழ்க்கரங்களில் தாங்கியவரும், வெண்மை வர்ணங்கொண்டும் ஆனந்தினீயுடன் இலங்குபவரான புருஷோத்தமரை வணங்கி ஆவாஹனம் செய்கின்றேன்.

**19. पश्चिमे –**

गदायुतदक्षोच्चकराय,शङ्खयुतवामोच्चकराय, चक्रयुतवामाधःकराय, पद्मयुतदक्षाधःकराय, नीलवर्णाय आज्ञासहिताय श्रीअधोक्षजाय नमः अधोक्षजं आवाहयामि ।

*19. பஸ்சிமே –*

*கதாயுததக்ஷோச்சகராய, சங்க்கயுதவாமோச்சகராய, சக்ரயுதவாமாத:கராய, பத்மயுததக்ஷாத:கராய, நீலவர்ணாய, ஆக்ஞாஸஹிதாய அதோக்ஷஜாய நம: அதோக்ஷஜம் ஆவாஹயாமி.*

(பொ.) 19. அதோக்ஷஜன்

மேற்றிசையில் அமைக்கப்பெற்ற ஐந்து கலசங்களில் மேற்றிசைக் கலசத்தில் கதை சங்கங்களைத் தன் வலது இடது மேற்கரங்களில் பெற்றும், சக்ரம் பத்மங்களைத் தன் இடது வலது கீழ்க்கரங்களில் கொண்டும், நீலவர்ணம் பெற்று ஆக்ஞையுடன் இலங்குபவரான அதோக்ஷஜரை வணங்கி ஆவாஹனம் செய்கின்றேன்.

## 20. उत्तरे –

पद्मयुतदक्षोच्चकराय, गदायुतवामोच्चकराय, शङ्खयुतवामाधःकराय, चक्रयुतदक्षाधःकराय, श्वेतवर्णाय, सुखासहिताय नारसिंहाय नमः नारसिंहं आवाहयामि ।

**20. உத்தரே –**

பத்மயுததக்ஷோச்சகராய, கதாயுதவாமோச்சகராய, சங்க்கயுத வாமாத: கராய, சக்ரயுததக்ஷாத:கராய, ச்வேதவர்ணாய, சுகாஸஹிதாய நாரஸிம்ஹாய நம: நாரஸிம்ஹம் ஆவாஹயாமி.

(பொ.) 20. நாரசிம்மன்

மேற்றிசையில் அமைக்கப்பெற்ற ஐந்து கலசங்களில் வடதிசைக் கலசத்தில் பத்மம் கதைகளைத் தன் மேலிரு கரங்களில் பெற்றும், சங்கம் சக்கரங்களைத் தன் இடது வலது கீழ்க்கரங்களில் தாங்கியும், வெண்மை நிறம் கொண்டும், சுகையுடன் இலங்குபவரான நரசிம்மரை வணங்கி ஆவாஹனம் செய்கின்றேன்.

## 21. उत्तरपञ्चके मध्ये –

पद्मयुतदक्षोच्चकराय, चक्रयुतवामोच्चकराय, शङ्खयुत वामाधःकराय, गदायुतदक्षाधःकराय, कनकवर्णाय, सुगन्धासहिताय अच्युताय नमः अच्युतमावाहयामि ।

**21. உத்தரபஞ்சகே மத்யே -**

பத்மயுத தக்ஷோச்சகராய, சக்ரயுத வாமோச்சகராய, சங்க்கயுத வாமாத:கராய, கதாயுத தக்ஷாத: கராய, கனகவர்ணாய, சுகந்தா ஸஹிதாய அச்யுதாய நம: அச்யுதம் ஆவாஹயாமி.

**(பொ.) 21. அச்யுதன்**

வடதிசையில் அமைக்கப்பெற்ற ஐந்து கலசங்களில் நடுக் கலசத்தில் பத்மம் சக்ரங்களைத் தன் மேலிரு கரங்களில் பெற்றும், சங்கம் கதைகளைத் தன் இடது வலது கீழ்க்கரங்களில் தாங்கியும், பொன் நிறம் கொண்டும், சுகந்தையுடன் இலங்குபவரான அச்யுதனை வணங்கி ஆவாஹனம் செய்கின்றேன்.

**22. पूर्वे–**

चक्रयुतदक्षोच्चकराय,शङ्खयुतवामोच्चकराय, गदायुत वामाधःकराय, पद्मयुतदक्षाधःकराय, रक्तवर्णाय, सुन्दरी सहिताय जनार्दनाय नमः जनार्दनमावाहयामि ।

**22. பூர்வே -**

சக்ரயுததக்ஷோச்சகராய, சங்க்கயுதவாமோச்சகராய, கதாயுத வாமாத:கராய, பத்மயுத தக்ஷாத: கராய, ரக்தவர்ணாய, சுந்தரீஸஹிதாய ஜனார்தனாய நம: ஜனார்தனம் ஆவாஹயாமி.

**(பொ.) 22. ஜனார்தனன்**

வடதிசையில் அமைக்கப்பெற்ற ஐந்து கலசங்களில் கீழ்த்திசைக் கலசத்தில் சக்ரம், சங்கங்களைத் தன் மேலிரு கரங்களில் பெற்றும், கதை, பத்மங்களைத் தன் இடது வலது கீழிரு கரங்களில் தாங்கியும், ரக்தவண்ணங்கொண்டும், சுந்தரியுடன் இலங்குபவரான ஜனார்தனனை வணங்கி ஆவாஹனம் செய்கின்றேன்.

**23. दक्षिणे –**

गदायुतदक्षोच्चकराय, चक्रयुतवामोच्चकराय, पद्मयुतवामाधःकराय, शङ्खयुतदक्षाधःकराय, नीलवर्णाय, विद्यासहिताय श्रीउपेन्द्राय नमः उपेन्द्रमावाहयामि ।

**23. தக்ஷிணே -**

*கதாயுதக்ஷோச்சகராய, சக்ரயுதவாமோச்சகராய, பத்மயுத வாமத:கராய, சங்க்கயுத தக்ஷாத:கராய, நீலவர்ணாய, வித்யாஸஹிதாய, ஸ்ரீஉபேந்தராய நம: உபேந்த்ரம் ஆவாஹயாமி.*

**(பொ.) 23. உபேந்திரன்**

வடதிசையில் அமைக்கப்பெற்ற ஐந்து கலசங்களில் தென்திசைக் கலசத்தில் கதை சக்கரங்களைத் தன் மேலிரு கரங்களில் பெற்றும், பத்ம சங்கங்களைத் தன் இடது வலது கீழிரு கரங்களில் தாங்கியும் நீலநிறங்கொண்டும், வித்யையுடன் இலங்குபவரான உபேந்திரனை வணங்கி ஆவாஹனம் செய்கின்றேன்.

**24. पश्चिमे –**

चक्रयुतदक्षोच्चकराय, पद्मयुत वामोच्चकराय, गदायुतवामाधःकराय, शङ्खयुतदक्षाधःकराय, कनकवर्णाय सुशीला सहिताय हरये नमः हरिं आवाहयामि ।

**24. பஸ்சிமே -**

*சக்ரயுததக்ஷோச்சகராய, பத்மயுதவாமோச்சகராய, கதாயுத வாமாத:கராய, சங்க்கயுததக்ஷாத: கராய, கனகவர்ணாய, ஸுசிலா ஸஹிதாய ஹரயே நம: ஹரிம் ஆவாஹயாமி.*

**(பொ.) 24. ஹரி**

வடதிசையில் அமைக்கப்பெற்ற ஐந்து கலசங்களில் மேற்றிசைக் கலசத்தில் சக்கரம் பத்மங்களைத் தன் வலது இடது மேற்கரங்களில் பெற்றும், கதை சங்கங்களைத் தன் இடது வலது கீழிருகரங்களில்தாங்கியும், கனகநிறங்கொண்டும், சுசீலையுடன் இலங்குபவரானஹரியை வணங்கி ஆவாஹனம் செய்கின்றேன்.

**25. उत्तरे –**

गदायुतदक्षोच्चकराय, पद्मयुतवामोच्चकराय, चक्रयुतवामाधःकराय, शङ्खयुतदक्षाधःकराय, कृष्णवर्णाय, दक्षिणासहिताय श्रीकृष्णाय नमः, श्रीकृष्णमावहयामि ।

***25. உத்தரே –***

*கதாயுததக்ஷோச்சகராய, பத்மயுதவாமோச்சகராய, சக்ரயுத வாமாத:கராய, சங்க்கயுததக்ஷாத:கராய, க்ருஷ்ண-வர்ணாய, தக்ஷிணா ஸஹிதாய, ஸ்ரீக்ருஷ்ணாய நம:, ஸ்ரீக்ருஷ்ணமாவாஹயாமி.*

***(பொ.) 25. கிருஷ்ணன்***

*வடதிசையில் அமைக்கப்பெற்ற ஐந்து கலசங்களில் வட திசைக் கலசத்தில் கதை பத்மங்களைத் தன் வலது இடது மேலிரு கரங்களில் பெற்றும், பத்மம் சக்ரங்களைத் தன் இடது வலது கீழ்க்கரங்களில் தாங்கியும், கறுமை நிறங்கொண்டும், தக்ஷிணையுடன் கிருஷ்ணனை வணங்கி ஆவாஹனம் செய்கின்றேன்.*

## श्रीकेशवादि चतुर्विंशतिनामस्तोत्रम्*

केशवस्तु सुवर्णाभः संयुतश्च श्रिया सदा ।
शङ्खचक्रगदापद्मधरो ध्येयोऽखिलैर्जनैः ॥ 1

नारायणः श्यामवर्णः सदा लक्ष्म्यायुतःप्रभुः ।
पद्मगदाशङ्खचक्रधरो ध्येयोऽखिलैर्जनैः ॥ 2

माधवो ह्युत्पलाभश्च सदा कमलया युतः ।
शङ्खचक्रपद्मगदाधरो ध्येयोऽखिलैः प्रभुः ॥ 3

1. Stotramala (R. 1452(a) G.O.M.L. Madras) Sarasvaati Mahal Library, Thanjavur. Book No. S. 3067, P.No. 428 & 429.

गोविन्दः शशिवर्णश्च पद्मया च युतः प्रभुः ।
गदापद्मशङ्खचक्रधरो ध्येयोऽखिलैर्जनैः ॥ 4

सविष्णुर्गौरवर्णाभो (ह्यब्धिकन्या)युतः प्रभुः ।
पद्मशङ्खचक्रगदाधरो ध्येयः सदा विभुः ॥ 5

मधुसूदनः शोणवर्णः प्रिया तु कमलालया ।
शङ्खपद्मगदाचक्रयुक्तो ध्येयोऽखिलैर्जनैः ॥ 6

त्रिविक्रमोऽग्निसङ्काशो रमया च युतःसदा ।
गदाचक्रशङ्खपद्मधरो ध्येयोऽखिलैर्जनैः ॥ 7

वामनः स्फटिकाभश्च वृषया प्रियया युतः ।
चक्रगदापद्मशंखधरो ध्येयोऽखिलैर्जनैः ॥ 8

श्रीधरस्तु हरिद्राभो धन्याख्यप्रियया युतः ।
चक्रगदाशङ्खपद्मधरो ध्येयोऽखिलैर्जनैः ॥ 9

हृषीकेशः सूर्यवर्णः बुध्याख्यप्रियया युतः ।
चक्रपद्मशङ्खगदाधरो ध्येयोऽखिलैः प्रभुः ॥ 10

पद्मनाभो घनश्यामो प्रियया यज्ञया युतः ।
पद्मचक्रगदाशङ्खधरो ध्येयोऽखिलैस्सदा ॥ 11

दामोदरो हेमवर्णः इन्दिराप्रियया युतः ।
शङ्खगदाचक्रपद्मधरो ध्येयोऽखिलैःप्रभुः ॥ 12

सङ्कर्षणः सुमुक्ताभो हिरण्या सहितः प्रभुः ।
शङ्खपद्मचक्रगदाधरो ध्येयः सदा जनैः ॥ 13

वासुदेवो नीरदाभो हरिण्याख्यप्रिया युतः ।
शङ्खपद्मचक्रगदाधरो ध्येयोऽखिलैः प्रभुः ॥ 14

प्रद्युम्नो रक्तवर्णश्च सत्यया संयुतः प्रभुः ।
शङ्खगदापद्मचक्रधरो ध्येयोऽखिलैः प्रभुः ॥ 15

अनिरुद्धोऽग्निवर्णश्च नीलया सहितः प्रभुः ।
गदाशङ्खपद्मचक्रधरो ध्येयोऽखिलैः सदा ॥ 16

पुरुषोत्तमस्तु रक्ताभो नित्ययानन्दया युतः ।
पद्मशङ्खगदाचक्रधरो ध्येयोऽखिलैः प्रभुः ॥ 17

अधोक्षजःश्यामवर्णः त्रय्याख्यप्रियया युतः ।
गदाशङ्खचक्रपद्मधरो ध्येयोऽखिलैः प्रभुः ॥ 18

नृसिंहः मणिवर्णाभः सुखया सहितः प्रभुः ।
गदापद्मशङ्खचक्रधरो ध्येयोऽखिलैर्जनैः ॥ 19

अच्युतः सूर्यवर्णश्च सुगन्ध्याख्यप्रिया युतः ।
पद्मचक्रशङ्खगदाधरो ध्येयोऽखिलैः प्रभुः ॥ 20

जनार्दनः कुन्दवर्णः सुन्दर्या सहितः प्रभुः ।
चक्रशङ्खगदापद्मधरो ध्येयोऽखिलैः प्रभुः ॥ 21

उपेन्द्रः शशिवर्णश्च विद्याख्यप्रियया युतः ।
गदाचक्रपद्मशङ्खधरो ध्येयोऽखिलैः प्रभुः ॥ 22

हरिर्वैडूर्यसङ्काशः सहितश्च सुशीलया ।
चक्रपद्मगदाशङ्खधरो ध्येयोऽखिलैः सदा ॥ 23

कृष्णोभिन्नाञ्जनप्रख्यो लक्षणाख्यप्रिया युतः ।
गदापद्मचक्रशङ्खधरो ध्येयोऽखिलैर्जनैः ॥ 24

इति श्री केशवादि चतुर्विंशतिनाम स्तोत्रं
सम्पूर्णम्



# ஸ்ரீகேசவாதி சதுர்விம்சதிநாம ஸ்தோத்ரம்

கேசவஸ்து சுவர்ணாப: ஸம்யுதஸ்ச ச்ரியா ஸதா।
சங்க்க சக்ரகதாபத்மதரோ த்யேயோகிலைர்ஜனை: ॥ 1

நாராயண: ச்யாமவர்ண: ஸதாலக்ஷ்ம்யாயுத:ப்ரபு: ।
பத்மகதாசங்க்கசக்ரதரோ த்யேயோகிலைர்ஜனை: ॥ 2

மாதவோ ஹ்யுத்பலாபஸ்ச ஸதா கமலயா யுத: ।
சங்க்கசக்ரபத்மகதாதரோ த்யேயோகிலைர்ஜனை: ॥ 3

கோவிந்த: சசிவர்ணஸ்ச பத்மயா ச யுத: பிரபு: ।
கதாபத்மசங்க்க சக்ரதரோ த்யேயோகிலைர்ஜனை: ॥ 4

ஸவிஷ்ணுர்கௌரவர்ணாபோ(ஹ்யபத்திகன்யா)யுத:ப்ரபு:
பத்மசங்க்கசக்ரகதாதரோ த்யேய: ஸதா விபு: ॥ 5

மதுசூதன: சோணவர்ண: ப்ரியா து கம்லாலயா ।
சங்க்கபத்மகதாசக்ரயுக்தோ த்யேயோகிலைர்ஜனை: ॥ 6

த்ரிவிக்ரமோக்னிஸங்காச: ரமயா ச யுத: ஸதா ।
கதாசக்ரசங்க்கபத்மதரோ த்யேயோகிலைர்ஜனை: ॥ 7

வாமன: ஸ்படிகாபஸ்ச வ்ருஷயா ப்ரியயா யுத: ।
சக்ரகதாபத்மசங்க்கதரோ த்யேயோகிலைர்ஜனை: ॥ 8

ச்ரீதரஸ்து ஹரித்ராபோ தன்யாக்யப்ரியயா யுத: ।
சக்ரகதாசங்க்கபத்மதரோ த்யேயோகிலைர்ஜனை: ॥ 9

ஹ்ருஷீகேசோ ஸூர்யவர்ண: புத்யாக்ய ப்ரியயா யுத: ।
சக்ரபத்மசங்க்ககதாதரோ த்யேயோகிலைர்ப்ரபு: ॥ 10

பத்மநாபோ கனச்யாமோ ப்ரியயா யக்ஞயா யுத: ।
பத்மசக்ரகதாசங்க்கதரோ த்யேயோகிலை: ஸதா ॥ 11

தாமோதரோ ஹேமவர்ண இந்திராப்ரியயா யுத:।
சங்க்ககதாசக்ரபத்மதரோ த்யேயோகிலை: ப்ரபு: ॥ 12

ஸங்கர்ஷண: ஸுமுக்தாபோ ஹிரண்யா ஸஹித: ப்ரபு: ।
சங்க்கபத்மசக்ரகதாதரோ த்யேயோகிலை: ப்ரபு: ॥ 13

வாசுதேவோ நீரதாபோ ஹரிண்யாக்ய ப்ரியாயுத: ।
சங்க்கபத்மசக்ரகதாதரோ த்யேயோகிலை:ப்ரபு: ॥ 14

ப்ரத்யும்னோ ரக்தவர்ணஸ்ச ஸத்யயா ஸம்யுத: ப்ரபு: ।
சங்க்ககதாபத்மசக்ரதரோ த்யேயோகிலை: ப்ரபு: ॥ 15

அநிருத்தோக்னிவர்ணச்ச நீலயா ஸஹித: ப்ரபு: ।
கதாசங்க்கபத்மசக்ரதரோ த்யேயோகிலைஸ்ஸதா ॥ 16

புருஷோத்தமஸ்து ரக்தாபோ நித்யயானந்தயா யுத:
பத்மசங்க்த்தகதாசக்ரதரோ த்யேயோகிலை:ப்ரபு: ॥ 17

அதோக்ஷஜ: ச்யாமவர்ண: த்ரய்யாக்ய ப்ரியயா யுத: ।
கதாசங்க்க சக்ரபத்மதரோ த்யேயோகிலை:ப்ரபு: ॥ 18

ந்ருஸிம்ஹ: மணிவர்ணாப: சுகயா ஸஹித: ப்ரபு: ।
கதாபத்மசங்க்கசக்ரதரோ த்யேயோகிலைர்ஜனை: ॥ 19

அச்யுத: சூர்யவர்ணஸ்ச சுகந்த்யாக்ய ப்ரியாயுத: ।
பத்மசக்ரசங்க்ககதாதரோ த்யேயோகிலை:ப்ரபு: ॥ 20

ஜனார்தன: குந்தவர்ண: ஸுந்தர்யா ஸஹித: ப்ரபு: ।
சக்ரசங்க்க கதாபத்மதரோ த்யேயோகிலை: ப்ரபு: ॥ 21

உபேந்த்ர: சசிவர்ணஸ்ச வித்யாக்ய ப்ரியயா யுத: ।
கதாசக்ரபத்மசங்க்கதரோ த்யேயோகிலை:ப்ரபு: ॥ 22

ஹரிர் வைடூர்யஸங்காச: ஸஹிதஸ்ச சுசீலயா ।
சக்ரபத்மகதாசங்ககரோ த்யேயோகிலைஸ்ஸதா ॥ 23

க்ருஷ்ணோ பின்னாஞ்சனப்ரக்யோ லக்ஷணாக்யப்ரியா யுத: ।
கதாபத்மசக்ரசங்க்கதரோ த்யேயோகிலைர்ஜனை: ॥ 24

***இதி ஸ்ரீகேசவாதி சதுர்விசதிநாம ஸ்தோத்ரம் ஸம்பூர்ணம்***



# ஸ்ரீகேசவாதி சதுர்விம்சதிநாம ஸ்தோத்ரம்

பொருள் : - ஸ்ரீகேசவாதி சதுர்விம்சதி நாமஸ்தோத்ரம் என்பது நமது நூலகத்திலுள்ள ஸ்தோத்ரார்ணவம் நூலிலிருந்து சேகரிக்கப்பெற்றது. சரசுவதிமகால் நூலகத்தில் S. எண் 3067ல் பதிவாகியுள்ள இந்நூலில் காணப்பெறும் மேற்கூறிய தோத்திரம் அரசினர் கீழ்த்திசை நூலகத்தின் R. 1452 (a) என்ற எண்ணிலிருந்து பதிப்பித்து வெளியிடப்பட்டுள்ளது.

இத்தோத்திரம் பொதுமக்களாலும் அரசர்களாலும் எப்போதும் நினைத்து, போற்றுதலுக்குப் பயன்படுத்தக் கோரியிருப்பதற்கு தோத்திர வாக்கியங்களே பிரமாணம் ஆகும். சதுர்விம்சதி மூர்த்திகளுக்கான தேவியின் குறிப்புகள் MSS 7305 உடன் ஒப்பிடும்போது விஷ்ணு, அநிருத்தன், கிருஷ்ணன் ஆகிய மூவரின் தேவிப்பெயர்களில் சிறிது மாறுபாடு தென்படுகிறது. மற்றய தேவிப்பெயர்கள் சமம்.இந்நூல் சங்கு, சக்ரம், கதை, பத்மம் ஆகிய ஆயுதங்களை வைத்துப் பார்த்தோமானால் நிரம்ப மாறுதல்களுடன் தோத்திர வழிப்பாட்டிற்கு மட்டுமே உகந்ததாக உள்ளது. மேலும் சதுர்விம்சதி மூர்த்திகளின் நிறக் குறிப்புப் பெரும்பாலும் மாறுதலோடுள்ளது. அவற்றை ஒப்பு நோக்குவோம்.

| சுவடிஎண் 7305 (coll.) | | புத்தக எண் S 3067 |
|---|---|---|
| பெயர் | நிறம் | நிறம் |
| 1. கோவிந்தன் | தப்தகாஞ்ஜனம் | சசி |
| 2. விஷ்ணு | ச்வேதம் | கௌரம் |
| 3. திரிவிக்கிரமன் | ரக்தம் | அக்னி |
| 4. வாமனன் | குந்தம் | ஸ்படிகம் |
| 5. ஸ்ரீதரன் | புண்டரீகம் | ஹரித்ரா |
| 6. இருடீகேசன் | வித்யுத் | சூர்யம் |

